

# சிவோஹம் பாராயணத் தொகுப்பு
# சிவார்ப்பண மஞ்சரி - 115

## ஸ்ரீ திருஞானசம்பந்தர் நாமாவளி

அடியார்கள் அனைவரும் ஸ்ரீ திருஞானசம்பந்தரின்
அருள்பெற அர்ப்பணிப்பு
சிவோஹம் சிவார்ப்பண ஞானதானம் - 2025 06/02 சோமவாரம்

# 1.00 திருஞானசம்பந்தர் நாமாவளி.

1

சத்திய ஞான சம்பந்தா
தண்டமிழ் முத்துறை யின்பந்தா
சண்பைப் பதிவளர் சம்பந்தா
சந்ததமும் துதிக்க இன்பம்தா.

2

**திருஞான சம்பந்த தேவாதி தேவா**
**திகழ்பரம ஞானநிலை தெரிவிக்க வாவா,**
**சிகாழி சம்பந்த தேவாதி தேவா,**
**சித்தமலை யாதவகை செய்விக்க வாவா,**

3

சண்பைவளர் திருஞான சம்பந்த நாதா
சன்மார்க்க சங்கச் தழைக்கவருள் தாதா,

4

**அடியார்கள் பவப்பிணி அகற்றச் சீகாழியில்**
**அவதாரம் செய்த சற்குரு நாதா**
**ஆதர வுன்திரு வடியன்றி அறிந்திலோம்**
**அற்புத மெய்ஞ்ஞான மருள் போதா.**

5

திருஞான சம்பந்தர் தேவாரம்
திருஞான சபைவளர் தேவாரம்,

6

**ஆளுடைய பிள்ளையார் அரியதிரு வடியே**
**அம்பலவர் அருளடையும் அடியர்பெறு முடிவே.**

7

**திருஞான சம்பந்த தேவனையே**
**தெரிசிக்கத் தீர்ந்திடும் தீவினையே,**

8

மறைஞான சம்பந்த மகதேவன் பாதம்
மறவாது பணிவோர்க்கு வருமேமெய்ப் போதம்

9

திருஞான சம்பந்த தேசிகன் பாதம்
சேவிக்குமவர் பெறுவர் தேவ ப்ரசாதம்

10

**நலமருள் சம்பந்த நாதனையே**
**வலம்வரு வார்க்கறும் வாதனையே.**

11

சீகாழிப் பதிமேவும் திருஞான சம்பந்த
தேசிகர் தேவாரம் தினம்துதிப் போம்
தேனாரும் பூங்கழல் சேவிக்கும் மெய்யன்பர்
திருவடித் துகளையெம் சிரம்பதிப் போம்

12

**அற்புதத் திருஞான சம்பந்தரே நமக்கு**
**ஆரிய ராக வறிந்து கொண்டோம்**
**அருந்தமிழ் வேதப் பனுவலையே நிதம்**
**அன்புடன் ஓத ஆனந்தம் கொண்டோம்**

13

ஒதாதே உணர்ந்தவர் ஞானசம் பந்தரென்று
உள்ள படியே உணரப்பெற் றோம்
திருஞான சம்பந்தர் திருநாமம் சொல்வோம்
உரு நாமம் பலபேதம் உறுமாயை வெல்வோம்

**14**

**ஞான சம்பந்த தயா நிதியே**
**நாளும் மகிழ்ந்தருள் வாய் கதியே**
**சீகாழி தனில்வந்த விண் மணியே**
**சிவபாத இருதயர் கண் மணியே**

15

பண்புறு கவுணிய குல மதியே
பகவதி யார்தரு குண நிதியே
மால்விடை மேலரன் அருங் காட்சி
மாதுமை யுடன்கண் டது கடாட்சி

**16**

**பார்வதி பாலுடன் வித்தக-மே**
**பருகி மகிழ்ந்திடும் கற்பக-மே**
**தோடுடைய செவியன் இவன் என்றே**
**சுட்டிப்பதி கம்பாடும் குணக் குன்றே**

17

பொற்றாளம் கரம்கொண்ட புண்ணிய-மே
புங்கவர் புகழ் சுப்பிரமண் ணியமே
முத்துச்சிவி கைமுதல் பெறுஞ் சதிரே
முத்தல மெங்கும் மகிழ்தரும் கதிரே

**18**

**கலைகளோ தாதுணர் பெருவாழ்-வே**
**கழலடைந் தவர்கட்கு இலைதாழ்-வே**
**சந்தத் தமிழ்க்கு இரங்கிய உமாபதியே**
**தந்தப்பொன் றந்தைக்கு அருள் பயோததியே**

19

யாம்மூரி பாடிய நாயக-மே
யாவரும் மகிழ்ந்திடும் தாயக-மே
மருகல்கில் விடம்தீர்த்த வருமருந்-தே
வணிகற்கு மணஞ்செய்த சிறுகுருந்-தே

20

**வாகீ சருடன்மகிழ் செங்கரும்-பே**
**மகிழ்ந்துமை வணங்கிலர் மனம்இரும்-பே**
**வீழி மிழலையுறு மாதவ-மே**
**மிளிர்பொற் காசு பெறுசிவ-மே**

21

மறைக்காட்டில் கதவடைத் திடம் சேயே
வணங்கினர்க் கருள் புரியுந் தாயே
மங்கையர்க் கரசியர் மகிழ் மதியே
வந்தெமை ஆண்டருள் இதுகதி-யே

**22**

**பாண்டியன் சுரம் தீர்த்த மந்திரமே**
**பகருதற்கு எவருள் அருந்திர-மே**
**ஏடெரி யாதன விடும் கோவே**
**ஏடெ திருறப்புன விடும்தேவே**

23

சமணரைக் கழுவிடும் பெரும்பகை-யே
சார்க்தவர்க் களித்திடம் பெருந்தகை-யே
புத்தன் தலையிடற வரும் சுடரே
புகழ்ந்துமை அடைந்தவர்க் கில்லை இடரே

24

**ஆண்பனை காய்க்கச் செயஅருள் வடிவே**

**அருந்தவர் புகழ்க்திடு மறைமுடி-வே**

**எலும்பைப் பெண்ணாக்கிய மூலிகை-யே**

**இசைந்தடி.யார்தொழும் ஆண்டகை-யே**

25

நல்லூர்ப் பெருமணத் தாலய-மே

நயந்தன் பர்க்கருள் மனோ லயமே

உரைக்கும் பரசமய கோளரி-யே

உவந்தெமை அனுதினம் ஆதரி-யே

26

**சைவப்பயிர் தழையப் பொழி புயலே**

**தங்குமப் பயிருக்குப் பெரு வயலே**

**நினைத்ததை அளித்திடும் மைந்தரு-வே**

**நினைப்பதற் கரியவோர் எம்குரு-வே**

27

அளவுபடா அருள் சாகர-மே

அடியவர் தமக்கு மனோகர-மே

சந்ததம் அன்பர்கள் தாமுய்ய-வே

சர்க்குண னும்கழல் வாழிய-வே

**ஸ்ரீஞானசம்பந்த சத்குரு திருவடிகள் போற்றி போற்றி**

## 2.0 திருஞானசம்பந்தர் கீர்த்தனை

**பண்: நட்டப்பாடை ராகம் : நாட்டக்குறிஞ்சி தாளம்: ஆதி (1/2இடம்)**

ஞானசம் பந்தனைத் துதிப்போ-மே
நம்தீ வினைதனை மிதிப்போ-மே.

காழியில் வந்தருள் கற்பக-மே
கடைக்கண் பார்த்தருள் சிற்சுக-மே (ஞானசம்)

சம்பந்த நாமச் சற்குரு-வே
தந்தருள் ஞான நற்றிரு-வே
ஞானசம் பந்தன்நம் ஆச்சார்யனே
ஞானநலம் தரு சீரிய-னே (ஞானசம்)

திருஞான சம்பந்த தேசிக மணியே
சிவசமயத் தோர்க்குத் திகழும்கண் மணியே
பொற்றாளம் கைக்கொண்ட புண்ணிய உருவே
பொன்னடியே எங்கள் புரையற்ற திருவே (ஞானசம்)

**ஸ்ரீஞானசம்பந்த சத்குரு திருவடிகள் போற்றி போற்றி**

## 3.0 நால்வர் வாழ்த்து

**பண்: வியாழக்குறிஞ்சி ராகம் : சௌராஷ்டிரம் தாளம்: ஆதி (1/2இடம்)**

சீர்மேவும் பார்பதியார் திருமுலைப்பால் உண்ட
திருஞான சம்பந்தர் திருவடி கள்வாழி

நீர்மேல்கல் மிதப்பித்த அப்பரடி.வாழி
நிமலனைத் தூதாய்விடுத்த தேசரடிவாழி

வார்மேவும் பெருந்துரையில் வள்ளல் அருள்பெற்ற
மாணிக்க வாசகர்தம் மலரடிகள் வாழி

பார்மேல் மற்றன்பர் அடிவாழி நம்நேச
பக்தஜன சபைவாழி வாழிபரன் அருளே.

**திருச்சிற்றம்பலம்**